


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Monday, 23rd January 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, MR. SPEAKER (THE HON DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

### STARRED QUESTIONS

*Loans*

* 81 *Q.*—SRI S. M. ANNAMALAI : *கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) 1959-60-ல், வடஆற்காடு மாவட்டம், கலசபாக்கம், போளூர் சமுதாய நலத் திட்டங்களில் எத்தனை (1) மாடு வாங்க, (2) கிணறு வெட்டக் கடன் மனுக்கள் வந்தன ?*

*(இ) எத்தனை மனுக்கள் தள்ளுபடி செய்யப்பட்டன ?*

*(உ) கூட்டுறவு சங்கங்களில் உறுப்பினர்களாக இருக்கின்ற காரணத்தால் தள்ளுபடி செய்யப்பட்ட மனுக்கள் எத்தனை ?*

THE HON. SRI C. SUBRAMANIAM :

| | | *Kalasapakkam.* | *Polur.* |
|---|---|---|---|
| (*a*) (1) | .. .. | 256 | 786 |
| (2) | .. .. | 154 | 326 |
| (*b*) | .. .. | 256 | 634 |
| (*c*) | .. .. | 47 | 132 |

SRI S. M. ANNAMALAI : *விவசாயக் கூட்டுறவு சங்கங்களில் உறுப்பினராக இருந்தால் சமுதாய நலத் திட்டப் பகுதியிலே உள்ள விவசாயிகளுக்கு கடன் தரக்கூடாதென்று ஒரு ஜி.ஓ. இருக்கிறது. அதன் காரணமாக விவசாயிகளுக்கு கடன் தர முடியாமல் இருப்பதனால் அந்த ஜி.ஓ-வை திருத்தவேண்டிய முயற்சி எடுப்பார்களா ?*

THE HON. SRI C. SUBRAMANIAM : *கடன் என்று சொல்லும் போது விவசாயிகள் பல இடங்களிலே கடன் வாங்குகிறார்கள். ஒன்றுக்கொன்று தாக்கீது இல்லாமல் போய்விடுகிறது. இனிமேல் விவசாயிகள் கடன் பெற வேண்டுமென்றால் கூட்டுறவு சங்கங்கள் மூலமாகத்தான் கடன் பெறவேண்டும் என்பது சர்க்காரின் கொள்கை. கூட்டுறவு சங்கத்தில் விவசாயிகள் அங்கத்தினராக இருக்கும் இடங்களிலே வேறுவிதமான கடன் கொடுக்கமுடியாது. அதுவும் குறுகியகால தவணை கடன் கொடுப்பது என்பது முடியாது.*